

# தாமிரபரணி

செப்டம்பர் 1-15, 2014

Vol. 22 Student Lab Journal of the Department of Communication, Manonmaniam Sundaranar University, Tirunelveli. 2014 September 1-15 Issue 3

## செய்வீர்களா?

கேரள அரசைப் பின்பற்றி தமிழகத்திலும் மதுவிலக்கு முன்னெடுக்கப்படுமா என்ற கேள்வி வலுத்துள்ளது.



# தாமிரபரணி

இதழ் 3 மலர் 22




## உள்ளே...

செப்டம்பர் 1—15, 2014




**தொடர்புக்கு:** தொடர்பியல் துறை, மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், அபிஷேகப்பட்டி, திருநெல்வேலி – 12.

இந்த இதழ் குறித்த கருத்துகளை தெரிவிக்க, *renusubeditor@gmail.com*

தலையங்கம்

# டிஜிட்டல் டோக்கன்

மாரி சீதா




பிரதமர் நரேந்திர மோடி 'பிரதம மந்திரி ஜன் தன்' திட்டத்தைத் தொடங்கி வைத்துள்ளார். இந்தத் திட்டத்தின் நோக்கம் ஏழை எளிய மக்களுக்கும் வங்கிக் கணக்கைப் பெற்றுத் தரவேண்டும் என்பதே ஆகும்.

இந்தத் திட்டத்தைச் செயலாக்குவதன் மூலம் அரசு மக்களுக்கு அளிக்கும் மானியங்கள் உள்ளிட்ட சலுகைகள் மக்களிடம் நேரடியாக, இடைத்தரகர்களின் தலையீடுகள் இல்லாமல் முறையாக சென்றடையும். மேலும், விவசாயிகள் வேளாண்மைக்கான விவசாயக்கடனைப் பெறவும் பெரிதும் உதவிகரமாக இருக்கும். இதனால், எளிய விவசாயிகளிடையே கந்துவட்டிக்காரர்களின் அட்டகாசம் குறையும்.

பிரதமர் தனது உரையில் குறிப்பிட்டபடி, இந்தியாவில் 80% குடும்பங்களில் கைப்பேசிகள் உள்ளன. ஆனால், வெறும், 58% குடும்பங்களுக்கு மட்டுமே வங்கிக்கணக்கு உள்ளது. கடந்த 2011ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படி இந்தியாவில் உள்ள 24.17 கோடி குடும்பங்களில் 14.5 கோடி குடும்பங்களில் மட்டுமே வங்கியைப் பயன்படுத்துகிறார்கள். மேலும் வங்கிக்கணக்கு வைத்துள்ள மக்களில் 67% மக்கள் நகர்புறங்களிலும் 33% மக்கள் கிராமப்புறங்களிலும் வசிக்கின்றனர். மகாராஷ்டிரா(68%), தமிழ்நாடு(52%), உத்திரப் பிரதேசம்(72%), மத்தியப் பிரதேசம்(46%), குஜராத்(51%), கர்நாடகம்(61%), மேற்கு வங்கம்(49%), பீகார்(44%) ஆகிய மாநிலங்களில் வங்கிகள் ஓரளவிற்கு கிராமப்புறங்களிலும் இயங்கி வந்தாலும், இன்னும் எந்த மாநிலத்திலும் 75%க்கு மேலான குடும்பங்கள் வங்கிச்சேவை பெறுபவையாக இல்லை.

இப்போது மோடியின் சிந்தனையில் மலர்ந்த புதிய திட்டமாக சிலாகிக்கப்படும் இந்தத் திட்டம், ஏற்கனவே 2005ஆம் ஆண்டிலிருந்தே ரிசர்வ் வங்கி வட்டாரங்களில் வளைய வந்துகொண்டிருக்கிற ஒன்று தான். ஆனால், சில நடைமுறைச் சிக்கல்களால் நொண்டிக்குதிரையாகக் கிடந்த இந்தத் திட்டத்தை, பாஜக அரசு பதவியேற்ற பின்பு ஊட்டமளித்து வலுவூட்டி இப்போது நடைமுறைப்படுத்தத் தொடங்கியுள்ளது. சிறுகுறு விவசாயிகள், தொழிலாளர்கள் மற்றும் பெண்களுக்கு வங்கிக்கணக்கை ஏற்படுத்தித் தருவதில் முன்முனைப்பு காட்டப்படும் என்றும் தெரிவித்திருக்கிறார் நிதியமைச்சர்.

> இந்தியாவிலும் ரூபாய் நோட்டுகளின் மூலம் நடக்கும் பரிவர்த்தனை குறையும்.

இந்தத் திட்டத்தை முழுமையாகச் செயல்படுத்துவதன் மூலம் குறிப்பிடத்தக்க பொருளாதார மாற்றம் ஏற்படக்கூடும். வங்கிச்சேவையை அதிகரிப்பதன் மூலமாக அதன் சார்புடைய மின் சாதனங்களின் வளர்ச்சி அதிகரிக்கும். அதனால், இந்தியாவில் டிஜிட்டல் புரட்சி உண்டாகலாம். இந்திட்டத்தின் கீழ் தொடங்கப்படும் வங்கிக் கணக்குகளுக்கு பண அட்டை(ATM கார்டு) வழங்கப்படும் என்றும் அரசு கூறுகிறது. படிபறிவில்லாத வங்கிப் பரிவர்த்தனையில் பழக்கமில்லாத ஏழை மக்கள் பண அட்டையைப் பயன்படுத்துவற்கு உதவிகோரி அந்நியரை நாடும் போது முறைகேடுகள் நடக்கும் வாய்ப்பும் உண்டு. இந்தத் திட்டத்தை செயல்படுத்துவதால் இங்கிலாந்து(2%), ஆஸ்திரேலியா(3%), ஜப்பான்(6%) உள்ளிட்ட நாடுகளைப் போல இந்தியாவிலும் ரூபாய் நோட்டுகளின் மூலம் நடக்கும் பரிவர்த்தனை குறையும் என்று ஸ்டேட் வங்கியின் சேர்மன் அருந்ததி பட்டாச்சாரியா தெரிவித்திருப்பது கவனிக்கத்தக்கது.

மோடி அரசு செயல்படுத்தும் இந்தத் திட்டம், நம் நாடு டிஜிட்டல் தேசமாவதற்கான டோக்கனாக எடுத்துக்கொள்ளலாம். என்றாலும், வங்கிப் பயன்பாடு குறித்த விழிப்புணர்வை எளிய மக்களுக்கும் ஏதுவான முறையில் அளிப்பது இந்தத் திட்டத்தின் வெற்றிக்கு உறுதுணையாக இருக்கும்.

நாட்டில் செயல்படுத்தும் எந்தவொரு பொருளாதார மேம்பாட்டுத் திட்டமும் ஏழைகளின் வாழ்வை முன்னேற்றும் விதமாக இருக்க வேண்டும். அப்போது தான் ரூபாய் நோட்டில் இருக்கும் காந்தியின் புன்னகை அர்த்தமுள்ளதாகும். •

# செய்வீர்களா?

வே. ஸ்ரீநிவாச கோபாலன்

புகைப்படக்காரர்: கதிரவன்




**கேரள அரசைப் பின்பற்றி தமிழகத்திலும் மதுவிலக்கு முன்னெடுக்கப்படுமா என்ற கேள்வி வலுத்துள்ளது.**

''**நா**னே ஒரு எறநூறு குடும்பத்த கெடுத்திருப்பன்ல... நாம்லான் பாவம் செய்தேன்டே!'' - ஒயின் ஷாப்பு ஓனராக இருக்கும் நண்பர் ஒருவர் பேச்சுவாக்கில் தன்னிடம் சொன்னதாகச் சொல்லிச் சிரித்தார் என் சிநேகிதர்.

அந்த மதுக்கடை உரிமையாளருக்கு இருக்கும் குற்ற உணர்ச்சி நம் தமிழக அரசுக்கு இருக்கிறா என்ற சந்தேகம் நீண்ட காலமாக நிலவி வருவது தான். அந்த சந்தேகம் இப்போது பெரிதாகிக் கொண்டே போகிறது.

ஆனால், மது என்னும் இருளில் மூள்கி திக்கு தெரியாமல் விழிக்கும் தமிழகத்திற்கு பக்கத்திலேயே இருக்கும் கேரள அரசு காட்டும் ஒளியின் திசையில் பயணிக்ககூடத் திராணியில்லையே! ஏற்கனவே, போதைப் பாக்குக்களுக்குத் தடை போட்ட கேரளா இப்போது இன்னொரு தடாலடி நடவடிக்கை எடுத்துள்ளது. மதுவுக்குத் தடா!

''மதுபான கடைகள் மற்றும் பார்கள் தடை செய்யப்பட்டால், மூன்று பாதிப்புகள் ஏற்படும் என தெரிவிக்கப்படுகிறது. ஒன்று, அரசுக்கு வருவாய் குறையும். இரண்டு, சுற்றுலா தொழில் பாதிக்கப்படும். மூன்று, கள்ளச்சாராய தொழில் அதிகரிக்கும் என கூறப்படுகிறது. இதை நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். சமுதாயம் சீர்கெடுவதை தடுப்பது தான் முக்கியம்; அரசுக்கு வருவாய் வருவது பாதிக்கப்படும் என்று கூறுவது தவறு. மதுபானங்களால் சமுதாயம் அடையும் பாதிப்பு, மதுவால் வரும் வருமானத்தைவிட அதிகம்.''

சமீபத்தில் கேரளாவில் பூரண மதுவிலக்கு படிப்படியாக அமலுக்கு வரும் என்ற அறிவிப்பை வெளியிட்டுப் பேசிய கேரள முதல்வர் உம்மன் சாண்டி இவ்வாறு குறிப்பிடுகிறார்.

ஏற்கனவே பத்து ஆண்டுகளில் கேரளாவில் பூரண மதுவிலக்கை அமல்படுத்தும் முயற்சியாக மாதத்தின் முதல் நாளில் மதுக்கடைகள் மூடப்படும் என்ற அறிவிப்பை வெளியிட்ட கேரள அரசு சமீபத்தில் 700 மதுக்கடைகளை மூடப்போவதாக அறிவித்திருப்பது அனைத்து தரப்பினரிடையேயும் வரவேற்பைப் பெற்றுவருகிறது. மேலும், மதுபானங்களின் விலையை 5% உயர்த்த உத்தரவு பிறப்பித்து இன்னும் அப்ளாஸை அள்ளுகிறார் கேரள முதல்வர் உம்மன் சாண்டி.

இத்துடன், மதுவுக்கு 5% விலை உயர்வால் அரசுக்குக் கிடைக்கும் நிதியை மதுபானக் கடைகளை அடைப்பதால் வேலை இழக்கும் ஊழியர்களுக்காகச் செலவளிக்க முடிவுசெய்துள்ளது. மேலும், அந்த நிதியைக் கொண்டு மதுவிலக்கு பற்றிய விழிப்புணர்வு நிகழ்ச்சிகள் நடத்தவும் ஏற்பாடு செய்யப்படும் என்றும் அறிவித்துள்ளது. அதற்காக

தனியே ஒரு நிதியத்தை அமைத்து செயல்படுத்தவும் முடிவெடுத்துள்ளது.

ஏற்கனவே 418 மதுபானக்கடைகள் மூடப்பட்டுள்ள நிலையில் இன்னும் 312 கடைகளை இந்த நிதியாண்டில் மூடுவதற்கு உத்தேசித்துள்ளது. ஆண்டு தோறும் 10% கடைகளைப் படிப்படிப்படியாக மூடுவதன் மூலம் பத்தாண்டுகளில் கேரளாவை மதுவில்லா மாநிலமாக்கத் திட்டமிடப்பட்டுள்ளதாக கேரள அரசு அறிவித்துள்ளது.

இனி கேரளாவில் மூன்று மற்றும் நான்கு நட்சத்திர ஹோட்டல்களிலும் 'மதுவுக்குத் தடா' என்று தடாலடியாக அறிவித்துள்ள அரசு ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் மட்டுமே மதுவுக்கு இடம் கொடுக்கிறது.

அதுமட்டுமில்லாமால், ஞாயிறு தோறும் கேரள மதுக்கடைகள் ஷட்டரை இறக்க சட்டத்தை களமிருக்கி வெகுவான பாராட்டுகளைக் குவிக்கிறது. இதன் மூலம் ஆண்டுக்கு 52 நாட்கள் மது விற்பனைக்குத் விடுமுறை விடப்படுகிறது என்று பெருமைப் படுகிறது கேரள அரசு.

குஜராத், மிசோரம், நாகலாந்து என்று மதுவிலக்கிற்கு முன்னோடியாகத் திகழும் மாநிலங்களிடம் இருந்து பாடம் கற்றுகொண்டுவிட்டது கேரளா. ஆனால், கேரளாவுக்கு பக்கத்திலேயே இருக்கும் தமிழகத்தில் தான் இந்தியாவிலேயே அதிகம் மதுவிற்பனை நடக்கிறது என்பது கவலைக்கிடமானது.

'எங்கெங்கெங்கு காணிணும் சக்தியடா' என்று பாடிய பாரதி இப்போது தமிழ்நாட்டில் இருந்தால் எப்படி பாடுவார் என்பது எல்லோரும் ஊகிக்கக்கூடியதே. எத்தனை காலமாக மதுவிலக்கைக் கோரி குரல் கொடுத்தாலும் தமிழக அரசுக்கு காதில் விழுவதில்லை. பாரபட்சமில்லாமல் தமிழர்களின் குடும்பங்களைக் குட்டிச்சுவராக்க எல்லா கட்சிகளுமே கூட்டணி அமைத்துள்ளன. அண்டை மாநிலமான கேரளத்தை முன்னுதாரணமாக வைத்து மதுவிலக்கைக் கோரும் பல்வேறு அமைப்பினரின் குரலும் காற்றில் கரைந்தவண்ணமே இருக்கிறது.

**அரசு ஈட்டிய மதுபான வருவாய்!**

**ஆயத்தீர்வை மற்றும் விற்பனை வரி மூலம் ஒவ்வொரு ஆண்டும் அரசுக்கு கிடைத்த வருவாய் இங்கே...**

| ஆண்டு | வருவாய் (கோடியில்) |
|---|---|
| 2003-04 | 3,639 |
| 2004-05 | 4,872 |
| 2005-06 | 6,030 |
| 2006-07 | 7,473 |
| 2007-08 | 8821 |
| 2008-09 | 10,601 |
| 2009-10 | 12,498 |
| 2010-11 | 14,965 |
| 2011-12 | 18,081 |
| 2012-13 | 21,680 |

இந்த இலட்சணத்தில் தமிழக முதல்வரின் பின்வரும் அறிக்கை கேலிக்கூத்தாக இருக்கிறது. ''கள்ள மதுபானம் அருந்தி மோசமாக பாதிக்கப்படும் மக்களின் சமூக பொருளாதார நலனை(!) மேம்படுத்தும் உறுதியான நோக்கத்தை செயல்படுத்துவதற்காக சீரிய கொள்கையை (டாஸ்மாக்) செயல்படுத்தி வருகிறது. இதனால் சமூக விரோதிகளிடம் சட்டவிரோதமாகப் பணம் சேருவதை கட்டுப்படுத்துவதிலும் அரசு கருவூலத்துக்கு வருவாய் சென்றடைவதையும் உறுதி செய்கிறது'' இப்படி வீர உரையாற்றும் தமிழக அரசிடம் மதுவிலக்குக்கான கெஞ்சல்கள் எல்லாம் செல்லுபடியாகுமா என்பது கேள்விக்குறி தான்.

இதுவரை ஆட்சியில் இருந்த கருணாநிதியும் ஜெயலலிதாவும் போட்டி போட்டுக்கொண்டு மதுபான நிறுவனங்களை திறந்து வைக்கின்றனர். கருணாநிதி தன் ஆட்சியில் ஆறு மதுபான நிறுவனங்களுக்கு பச்சைக்கொடி காட்டினார். கடந்த இரண்டு ஆண்டுகளில் மட்டும் ஜெயலலிதா அரசு நான்கு மதுபான நிறுவனங்களுக்கு வாசல் திறந்துவிட்டிருக்கிறது. ஆனால், கேரளாவில் உம்மன் சாண்டி பதவியேற்ற பிறகு ஒரு மதுபான நிறுவனத்திற்கும் உரிமம் வழங்கப்படவில்லை என்பது தமிழக அரசு கவனிக்க வேண்டிய ஒன்று.

மதுவைத் தானே விற்பனை செய்யும் அரசு மதுவிலக்குக்குத் தனியே துறையையும் வைத்திருக்கிறது என்பது நகைமுரண். மேலும், மதுவின் பெயரால் கோடிகோடியாக லாபம் அடிக்கும் அரசு மது விலக்கு விழிப்புணர்வுக்கு வெறும் ஒரு கோடியை மட்டும் ஒதுக்கிவிட்டு பீத்திக்கொள்கிறது.

தமிழகத்தில் மதுபானங்களை ஒழிப்பதால் அரசுக்கு வருமானம் போய்விடும் என்று கூறுவது அபத்தமானதாக இருக்கிறது. தமிழகத்தில் ஆண்டொன்றுக்கு மதுவால் கிடைக்கும் வருமானம் 22 ஆயிரம் கோடி. போதாக்குறைக்கு சமீபத்தில் மதுபானங்களின் விலையையும் ஏற்றியிருக்கிறது. எனவே, 25 ஆயிரம் கோடி வரை வருமானம் கிடைக்க வாய்ப்பு இருக்கிறது. ஆனால், மதுவால் உண்டாகும் இழப்புகள் இதைவிடப் பல மடங்கு பெரிதான தொகையை விழுங்குகிறது.

தமிழ்நாட்டில், மது அருந்துவதால் உயிரிழப்போரின் எண்ணிக்கை தோராயமாக இரண்டு இலட்சமாக உள்ளது. இதனால், மதுபானங்களால் ஏற்படக்கூடிய சமூக மற்றும் மருத்துவப் பாதிப்புகளைச் சரிசெய்யவே ஆண்டு தோறும் 40 ஆயிரம் கோடி செலவிடப்படுகிறது. இந்தத் தொகையையும் மதுவால் அரசுக்குக் கிடைக்கும் வருமானத்தையும் ஒப்பிட்டால் ஏறத்தாழ 20 ஆயிரம் கோடி ரூபாய் இழப்பு தான் உண்டாகிறது என்று கண்கூடாகத் தெரிகிறது. ஆனால், தமிழக அரசு எதையும் கண்டுகொள்ளாமல் குருடாகவே இருக்கிறது. மதுவை ஒழிப்பதால் வருமானம் குறையும் என்று விடாமல் கதைக்கும் அரசு, காவல் துறை மற்றும் மருத்துவத் துறைக்கானச் செலவினங்கள் குறையும் என்பதை கருத்தில் கொண்டாலே மதுவிலிருந்து தமிழத்திற்கு விடியல் பிறந்துவிடும்

எனவே, பல்வேறு அமைப்புகளும் இப்போது தமிழக அரசின் கழுத்தில் மாட்டும் கொக்கி 'மதுவிலக்கு நடைமுறைக்கு வருமா? என்ற கேள்விதான்.

மதுவிலக்கிற்காக கேரளாவில் எடுக்கப்பட்டுள்ள அதிரடி நடவடிக்கையை முன்னிட்டு தேர்தலின் போது மக்களிடம் ஜெயலலிதா கேட்ட அதே கேள்வியையே மக்களும் இப்போது கேட்கிறார்கள். 'செய்வீர்களா...? செய்வீர்களா....?' •

## என்ன சொல்கிறார்கள்?

**ஜெய மோகன்** *(எழுத்தாளர்)*

குடியை கட்டுப்படுத்துவதை பெண்கள் மட்டுமல்ல, குடிகாரர்களே கூட வரவேற்பதை காணமுடிகிறது. ஏனென்றால் பெரும்பாலான குடிகாரர்கள் குடி அதிகமாக கிடைப்பதனால், கண்படும் இடமெல்லாம் அதுவே தெரிவதனால் தான் அதிகம் குடிக்கிறார்கள். கேரள அரசின் பொருளியலை எவ்வகையிலும் குடிக்கட்டுப்பாடுகள் குறைக்கவில்லை. குடியில் வரும் வருமானத்தை மிக எளிதாக பிறவற்றில் ஈடுகட்ட முடிகிறது. அதேசமயம் பகலில் முழுமையாகவே குடி கட்டுப்படுத்தப் படுவதனால் உழைப்புத்திறன் வீணாவதில்லை. பணியிடங்களில் திறன் அழிவதில்லை. முக்கியமாக வாகன விபத்துக்கள் வியக்கத்தக்க அளவில் குறைந்துள்ளன.

தமிழக அரசு, நம் அரசியல்வாதிகள் கருணை கூர்ந்து பகலில்மட்டுமாவது மதுக்கடைகளை மூடினால் தமிழகத்திற்கு ஒரு சிறிய ஆறுதல் கிடைக்கலாம்

**ஆவடி குமார்** *(அ.தி.மு.க.)*

பூரண மதுவிலக்கு என்பதே, தமிழக முதல்வரின் நோக்கம். ஆனால், அண்டை மாநிலங்களில் நிலவும் மது கொள்கை, இதற்கு எதிராக உள்ளது. அதே நேரத்தில், கேரளாவில் உரிமம் ரத்து என்பது, ஸ்டார் ஓட்டலுக்கு தான். எனவே, அம்மாநிலத்தின் கொள்கை ஒன்றும் முன்னோடி அல்ல.

**டி.கே.எஸ்.இளங்கோவன்** *(தி.மு.க.)*

மாநில அரசின் வருவாயில் பெரும் பகுதி மத்திய அரசுக்கு செல்கிறது. கலால் வரியை மட்டுமே, மாநில அரசுகள் நம்பியுள்ளன. அதனால், மது கடை வருவாய் முக்கியமாக உள்ளது. இருந்தாலும், மதுவினால் சமூகத்தில் ஏற்படும் பாதிப்பை மனதில் கொண்டு பூரண மதுவிலக்கு பற்றி சிந்திப்பது மிக அவசியம்.

---

# சுற்றி வளைக்கும் சுவரொட்டிகள்

**இவாஞ்சலின், ஸ்ரீநி**

சில மாதங்கள் முன்பு திருச்சி சென்றிருந்த போது ஒரு வீட்டின் சுவற்றில் எழுதியிருந்த வாசகம் மிரட்டலாக இருந்தது. (பொதுவாக சுவரொட்டி ஒட்டுவதற்கு இதுபோன்ற எச்சரிக்கை வாசகங்கள் உள்ள சுவர்கள் தான் ஆகச்சிறந்ததாகத் தேர்வு செய்யப்படுவது வழக்கம்.) சுவரொட்டிகள் ஒட்டுவதைத் தடுக்க, அந்த சுவற்றின் சொந்தக்காரர் பின்வருமாறு எழுதியிருக்கிறார்.

'இங்கே நோட்டீஸ் ஒட்டாதே. மீறினால் நடவடிக்'கை *எடுக்கப்படும்'* – இவ்வாறு எழுதி வைப்பது ஒரு வகையில் பொதுவான மிரட்டலாகக் கருதி அவர்கள் மீதே நடவடிக்'கை எடுக்கலாமே' என்று தோன்றியது. ஆனாலும், எங்கள் ஊரில் உள்ள நோட்டீஸ் தீவிரவாதிகளை நினைத்துப் பார்த்த போது அந்த வாசகத்தில் ஒளிந்துகொண்டிருந்த மிரட்டல் அவசியம் தான் என்று தோன்றியது.

எங்கள் ஊரின் பேருந்து நிழற்குடையின் நிலையைச் சொல்லி மாளாது. ஒரு கோடை காலத்தில் செக்கச்செவேலென பெயிண்ட் அடித்து தயாரான எங்கள் கிராமத்துப் பேருந்து நிழற்குடை பல்லிளிக்கும் பன்னிரெண்டு மணி வெயிலில் பளபளப்பாக சிரிக்கும். மரத்தடி நிழலை ஆட்டுப்புழுக்கைகளும் நாய் மூத்திரமும் ஆக்கிரமித்துவிடுவதால் சிறுவர்களைத் தவிர யாரும் மரத்தடியைப் பெரும்பாலும் அண்டுவதில்லை. சிறுவர்கள் சிலர் மட்டும் கூட்டமாக வந்து கோலிக்காய் விளையாடிக் கொண்டிருப்பார்கள். யாராவது வீட்டாள்கள் வந்தால், தூரத்தில் வரும் போதே கவனித்து காணாமல் போய்விடுவார்கள். ஆள் கடந்த பிறகு மீண்டும் ஆட்டம் தொடரும். இவ்வாறு, மரத்தரடி நிழல் கிட்டத்தட்ட சின்னப் பயல்களிடம் குத்தகைக்கு விடப்பட்டிருந்தது. எனவே, பேருந்து நிழற்குடை வந்த புதிதிலேயே பயணிகளின் நிழற்குடை பெரியவர்களின் பேராதரவோடு மிளர்ந்தது. ஆனால், ரொம்ப நாட்களுக்கு இல்லை. சில வாரங்களில் ஊரில் பெரியகைக்காரர் ஒருவருடைய வீட்டில் ஒரு பிள்ளைக்குச் சடங்கானது. அதனை முன்னிட்டு 'பெரிய மனுஷி'யின் சிரிக்கும் முகத்தோடு நோட்டிஸ் அடித்தார்கள். முதல் நோட்டீஸ் பேருந்து நிழற்குடையின் வெளிப்புறம். திசைக்கு ஒன்றாக ஒட்டப்பட்டது. பத்தாதென்று, உள்ளேயும் ஒட்டினார்கள். அவ்வளவுதான். பேருந்து நிழற்குடை விளம்பரச் சுவராக மாற அன்று தான் தொடக்கவிழா நடத்தப்பட்டது. பிறகு, ஒரு வருடத்திற்குள் நிழற்குடையின் பளபளக்கும் சிகப்பு நிறத்தைக் காணவில்லை. எல்லா திசையிலும் நோட்டீஸ்கள்! பளபளக்கும் செந்தோற்றமுடைய பேருந்து நிழற்குடையின் நிர்வாணத்தினைக் காண முடியாமல் சுவரொட்டிகளால் அதற்கு ஆடை அணிவித்துவிட்டார்கள். ஆடுகள் அதனைப் பொறுக்காமல் ஆளில்லா சமயத்தில் எல்லா போஸ்டர்களிலும் வாய்வைக்கும்.

பெரிய மனுஷி ஆன சின்ன மனுஷியைப் பெரிய மனதுடன் வாழ்த்துவோம், ஆண்டவனிடம் போன ஆத்தாவை ஆராதிப்போம், உலகில் சிறந்தநாள் உன் பிறந்தநாள்' என்பன போன்ற பல வாசகங்களைத் தாங்கிய சுவரோட்டிகள் படிப்படியாக நிழற்குடையை நிறம் மாற்றின. கோயில் கொடை, வீட்டு விசேசங்கள், அரசியல் பிரச்சாரங்கள், நடிகர்களுக்கு பிறந்தநாள் வாழ்த்துக்கள் என்று பல்வேறு காரணங்களை முன்னிட்டு சுவரொட்டிகள் ஒட்டப்படும்.

எங்கள் கிராமத்து நிழற்குடையைச் சுவரொட்டிகள் ஒரு வழியாக்கியதைத் தடுக்க, 'கை எடுக்கப்படும்' என்ற பூடகமான மிரட்டலோடு வாசகம் எழுதினாலும் கூட போதாது.

சுவரொட்டிகளின் அராஜகம் கிராமத்தில் மட்டும் என்றில்லை. நகரத்தில் என்றால் இதைவிட மோசமாக இருக்கும். நகரத்து பேருந்து நிழற்குடைகளில் இருக்கிற இருக்கைகளில் கூட விளம்பர நோட்டீஸ்கள் அணிவிக்கப்பட்டிருக்கும். அவை பெரும்பாலும், சின்ன சின்ன நோட்டீஸ்களாக இருக்கும். அவற்றில் 'ஆண்மைக்குறைவா? கவலை வேண்டாம்', 'உறவில் சிக்கலா? உடனே தீர்வு!' என்பன போன்ற வாசகங்களைத் தலைப்பாகக் கொண்டவை தான் அதிகமாக இருக்கும். அட! பேருந்தில் பள்ளிக்குச் செல்லும் பிள்ளைகளுக்குப் பாலியல் விழிப்புணர்வு அளிக்கும் சேவையா இது?

சுவரொட்டிகளின் மிதமிஞ்சிய ஆக்கிரமிப்பு எல்லா இடங்களிலும் தான் பெருகி இருக்கிறது. வாகனங்களில், பொதுச்சுவர்களில், மரங்களில், மின் கம்பங்களில் என்று எங்கும் விளம்பர நோட்டீஸ்கள் தான். கட்டப்பட்டுக் கொண்டிருக்கும் வீட்டிற்கான மேற்கூரை ஓரிரவு பொதுவெளியில் இருந்தால் அது நோட்டீஸ்களின் ஆக்கிரிப்பால் விளம்பரத் தட்டியாக மாறிப்போகும். நெடுநாட்களாகத் திறக்கப்படாத கடையின் ஷட்டர் விளம்பர நோட்டீஸ்களின் சரணாலயமாகும். ஏன்? பல இடங்களில் அஞ்சல் பெட்டிகளும் கூட சுவரொட்டிகளுக்குள் தலைமறைவாகி இருப்பதைக் காணலாம். கோயில் சுவரின் நிலையும் கூட மோசம் தான். சர்ச்சுகளின் சுற்றுச்சுவர்களிலோ மறைவாசகம் எழுதப்பட்டிருப்பதை மறைத்து நோட்டீஸ்கள் ஒட்டப்படும். ஒரு காவல் நிலையத்தின் சுவற்றிலேயே ஆபாசமான சினிமா சுவரொட்டிகள் தொடர்ந்து ஒட்டப்படுகிறது என்றால் என்னத்த சொல்ல?

சுவரொட்டிகள் உண்டாக்கும் விளைவுகள் விதவிதமாக வந்துகொண்டு இருக்கின்றன. தற்காலத்தல் பெரும்பாலும் ஒட்டப்படுபவை அரசியில், சினிமா சார்ந்த நோட்டீஸ்களே. கிராமங்களில் என்றால் பெரும்பாலும் சாதிய விளம்பர நோட்டீஸ்களே அதிகம்.

ஒரு நடிகரின் படம் வெளியாவது பற்றிய சுவரொட்டி அந்த நடிகரின் இரசிகர்களால் ஒட்டப்படுகிற பொழுது மற்றொரு நடிகரின் இரசிகர்கள் அதனைக் கிழிக்கிறார்கள். கிண்டலடிக்கிறார்கள். அதனால், இரு தரப்பினரிடையே மோதல் உண்டாகிறது. சாதிய நோட்டீஸ்கள் விளைவிக்கும் பிரச்சனைகள் வெட்டுகுத்து வரைக்கும் போகக்கூடியது. ஒரு சாதியினர் தங்கள் போஸ்டர்களை எப்போதும் மற்றொரு சாதியினர் அதிகம் வசிக்கும் இடங்களில் தான் ஒட்டுவார்கள். உடனே, மற்ற சாதியினர் 'எங்க ஏரியால உங்க சாதி போஸ்டர் ஏன் ஒட்டின?' என்று சட்டையைப் பிடிப்பார்கள். சண்டை மூளும். மூக்கு உடையும். பல் விழும். மண்டை உடையும். கொலையும் நடக்கும்.

இவை ஒருபுறம் தொடர் கதையாக நிகழ்ந்துகொண்டிருக்க, அரசியல் சுவரொட்டிகள் தனித்துவமான களேபரங்களை சீராக உண்டாக்குகின்றன. அரசியல் சுவரொட்டிகளை இப்படியான விளைவு தான் உண்டாக்கும் என்று கணிப்பது கடினம். வாக்குச் சண்டைகளும் நடக்கும். மறைவான துப்பாக்கிச் சண்டைகளும் நடக்கும். அதே சமயம், அரசியல் போஸ்டர்களில் சிரிப்பூட்டும் கேலிகளும் பாராட்டுகளும் கூட இடம்பெறும். சில பத்திரிக்கைகள் அரசியலில் ஒருவரை மற்றவர் கிண்டலடிக்கும் அல்லது தற்பெருமை பேசும் அரசியல் போஸ்டர்களைக் கண்டுபிடித்து அதற்காக தனி பகுதியே வைத்து நக்கலான கேப்ஷனும் கொடுத்துக் கலாய்க்கின்றன.

சுவரொட்டிகளின் பிரயோஜனம் ஒரு காலத்தில் இன்றியமையாததாக இருந்தது. இப்போது எங்கெங்கும் சுவரொட்டிகள் காணக் கிடைக்கின்றன. சகஜமாகிவிட்ட எதுவும் முக்கியத்துவத்தை இழக்கும் என்பதற்கு சுவரொட்டிகள் சான்றாகின்றன. இருந்தாலும், குறிப்பிட்ட விளம்பரப் போஸ்டு இருப்பதை வைத்து தங்களுக்கான பேருந்தை எளிதே அடையாளம் காண முடிவதாகக் கூறும் சிலரின் பாஸிடிவ் நினைப்பு ஒரு நெகட்டிவான விஷயத்தையும் சொல்கிறது. 'மக்கள் குறைகளைக் களையும் வழியை யோசிப்பதில்லை. மாறாக, குறைகளைச் சகித்துக்கொள்ளவே பழகிக் கொள்கிறார்கள்.' •

## பாடலால் பெயர் பெற்ற புலவர்

ஒருவன் தன் காதலியைப் பிரிந்து சம்பாதிப்பதற்காக தொலைதூரம் சென்றுவிட்டான். தன் பணியை முடித்துவிட்டுக் காதலியைப் பார்க்க விரும்பி வேகமாக வருகிறான். ஓரே ஏரினை வைத்து உழும் உழவனைப் போலத் துரிதமாக வருகிறான்.

மழை பெய்து ஈரமெய்திய பெரும் உழுநிலைத்தைத் ஈரம் காயும் முன்பே உழுதுவிட நினைப்பவன் பல ஏர்களை உடையவனானால் பல ஏவலாட்களைக் கொண்டு விரைந்து உழுது முடிப்பான். மாறாக, ஓரே ஏரினை மட்டும் வைத்திருப்பவனானால், நிலத்தில் ஈரம் காயும் முன்பே உழுதுவிட வேண்டுமே என்ற எண்ணத்தில் சோர்வில்லாமல் தொடர்ந்து விரைந்து ஏர் செலுத்துவான். அத்தகைய, ஓர் ஏரினை மட்டுமே கொண்டு உழும் உழவனைப் போலத்தான், பொருளீட்டி திரும்பும் காதலன் விரைவாகத் தன் காதலியைப் பார்க்கச் சென்றான்.

இவ்வாறு, குறுந்தொகையின் *131* வது பாடலில் தலைவியைக் காணச் சொல்லும் தலைவனின் வேகத்திற்கு ஓர் ஏர் உழவனின் விரைவை உவமையாக்கியதால் பாடிய புலவருக்கு 'ஓரேருழவர்' என்று பெயர் கிடைத்துவிட்டது.

ஓரேருழவரின் குறுந்தொகை பாடல் இதோ...

ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோட்
பேரமர்க் கண்ணி யிருந்த வூரே
நெடுஞ்சே ணாரிடை யதுவே நெஞ்சே
ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்
தோரே ருழவன் போலப்
பெருவிதுப் புற்றன்றா னோகோ யானே.

# படைப்புகள் முன்வைக்கும் மக்கள் விரோதப்போக்கு

• பாலா ரா. கணேஷ்

ஒரு கலைப்படைப்பை இன்று இத்தனை அவசியமாக நாம் கொண்டாட வேண்டிய அவசியம் என்ன? வெறும் திரையில் தோன்றும் உருவங்களோ, இல்லை புத்தகத்தில் படிந்துக் கிடக்கும் சொற்களோ, மக்களை எந்த வகையில் சென்றடையும்? கலைகள் மக்களை என்ன செய்துவிட முடியும்? அவர்களுக்குள் மாற்றங்களை உருவாக்கிவிடும் சாத்தியம் உண்டா? இல்லை, அதற்காக நாம் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம் என்ன? இதன் வழி ஒரு தேடலை மட்டுமல்ல, இதன் மூலமாக நடக்கும் அரசியலையும் இன்று கவனத்தில் கொண்டு வர வேண்டிய அவசியத்தில் இன்று நாம் இருக்கிறோம்.

இதற்கான காரணங்களை நாம் தேட துவங்க வேண்டியது நமது பாட்டன்களான தமிழ் முன்னோடிகளிடமிருந்துதான். காலம் காலமாக நம்மை ஆட்டுவித்துக் கொண்டிருக்கும் ஒரு மிகப்பெரும் பிரச்சனை தவறான வரலாறுகளும் அதன் வழியாக நம்மை ஆட்டுவிக்கும் ஆதிக்க சக்திகளுமே. நமது உண்மையான வரலாற்றினைத் தேடி அதனை பதிவு செய்ய வேண்டிய மிக முக்கிய இடத்தில் இன்று நாம் இருக்கிறோம். அதன் காரணம் ,பொய்யான தகவல்களின் வாயிலாக தம் வரலாற்றை வீரம் செறிந்த ஒரு அமைப்பாகவோ, இல்லை தனது இனத்தை சேர்ந்த ஒரு மனிதரை வீரத்தின் அடையாளமாகவோ, இல்லை இவர் தான் மாமனிதர் என்னும் பொய்மையையோ விதைக்க முயற்சிகள் நடைபெற்று அதன் மூலமாக இங்கு ஒரு பொய்யான கற்பிதம் உருவாக்கப்பட்டு வரலாற்றின் பக்கங்களிலிருந்து மக்களின் தலைவர்கள் சிதைக்கப்பட்டு அவர்களுக்கான வரலாறுகள் அழிக்கப்படுகின்றன. இதற்கு ஏற்றார்ப்போல் இன்றைய ஊடகங்களும் தங்களது பங்குக்கு இந்திய வரலாற்றை சிதைத்து குதறிப்போடுகின்றன. இதனால்தான் உரக்க கூறுகிறேன், ஒவ்வொரு மனிதரும் தங்களது சொந்த வரலாற்றை அறிந்துக் கொள்ள மிகுந்த ஆவலுடன் முன்வர வேண்டும். இதற்கு முன்பு நாம் தெரிந்துக் கொள்ள வேண்டியது , ஒரு ஊடகம் எவ்வாறு வரலாற்றை பதிவு செய்கிறது?

ஒரு நல்ல இலக்கிய படைப்பு, அது எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம், நாடகம், திரைப்படம், நாவல், குறு நாவல், மரபுக் கவிதை, ஹைக்கூ, குறுஞ்செய்தி... இப்படி எது வேண்டுமானாலும் இருக்கட்டும். ஒரு படைப்பானது தரமான படைப்பாக அமைவது, அந்தக் காலத்தின் இயல்பான பிரச்சனைகளை உள்வாங்கிக்கொண்டு, படைப்பின் மூலமாக அதனை வெளிக்கொணரும்போது தான். அதுமட்டுமின்றி படைப்புகளின் வழியாக அந்த காலத்து மக்களின் உடைகள், உணவு முறைகள், பழக்க வழக்கங்கள், இயல்பான வாழ்க்கை முறைகள், மதத்தினால் நடக்கும் விளைவுகள், அந்த சமூகத்தில் ஊறியிருக்கும் அடிப்படை நுண்ணுர்வு விஷயங்கள் என அனைத்து விஷயங்களையும் ஒருங்கே மக்களின் பார்வைக்கு கொண்டு செல்ல வேண்டும். இதுவே, தரமான படைப்பின் அடையாளம். ஆனால், இதற்கு எதிர்மறையாகவே வரலாறு நெடுக நிறைய படைப்பாளர்கள் தங்களது படைப்புகளின் வாயிலாக மக்களுக்கு எதிராகவும், அரசிற்கு நன்கு ஜால்ரா தட்டும்படியும் இருந்துள்ளனர். அத்தகைய படைப்புகளே இன்று தரமிக்கவையாகவும், இவையே உண்மை என நம்பும்படியும் சொல்லப்படுகிறது. இதற்கான உதாரணங்களை நாம் பட்டியலிட்டுக் கொண்டே செல்லலாம். இந்த படைப்புகளின் நோக்கம் எல்லாம் ஒன்றே. தனது நூல்களின் வாயிலாக ஒரு பொய்யான ஆதாரத்தினை உருவாக்கி எதிர்கால மக்கள் அந்த பொய்களின் மூலமாகவே வரலாற்றினை பின் தொடர வேண்டும் என்பதுதான். இதனால், அவர்கள் சாதித்திருக்கும் நெடிய வரலாறும் நம்மிடையே உண்டு. இதனால்தான் நாம் நம் வரலாற்றினை உருவாக்கும், இந்த ஊடகங்களின் வழியே நடக்கும் ஒவ்வொரு நிகழ்வுகளையும் நாம் உற்றுநோக்க வேண்டிய அவசியமான இடத்தில் இருக்கிறோம்.

இன்றைய காலத்தில் ஒரு படைப்பாளர் தன் சமூகத்தின் வழியாக நின்று தனது படைப்புகளை உருவாக்க முனைகிறாரா என ஆராய்ந்தால் அதற்கு எதிராகவே நிறைய படைப்புகளை நம்மால் காண முடிகிறது. இது இந்த காலத்தின் சாபக்கேடு. இன்றைய நாகரீக மனித வாழ்க்கையில் (மன்னிக்கவும், இப்படித்தான் இவர்கள் தங்களை அடையாளப்படுத்துகிறார்கள்) ஒடுக்கப்படும் மக்கள் குறித்தோ, தனி மனிதத்தன்மைக் குறித்தோ, ஆட்சியாளர்களின் தவறுகள் குறித்தோ, இன்றைய மக்களின் அடையாளங்கள் குறித்தோ எந்த ஒரு விழுமியங்களும் படைப்புகளில் இருப்பதாகத் தெரியவில்லை. குறிப்பாக, நூறு ஆண்டுகளாக இந்தியாவில் தனக்கான இடத்தினை வகிக்கும் திரைப்படங்களை எடுத்துக் கொண்டால், இந்த ஆவண முயற்சியில் நாம் எத்தகைய இடத்தில் இருக்கிறோம் என்பதை கண்கூடாக காண முடியும். இன்றைய திரைப்படங்களின் அதிகப்பட்ச கதைகளின் கருவாக இருப்பது காதல் மட்டுமே. உங்கள் நாட்டில் காதல் மட்டும்தான் பிரச்சனையா என வெளிநாட்டவர்கள் கிண்டலடிக்கும் அளவிற்கு திரையில் காதல் கொடிகள் படர்ந்துக் கிடக்கின்றன. இது ஒரு வகையில் நமது தேசத்தின் சாபக்கேடு என்று தான் சொல்ல வேண்டும். ஏனெனில் காலம் காலமாக மற்ற தேசங்களில் மிகப்பெரும் ஆவணமாக இருக்கும் திரைத்துறை நமது தேசத்தில் மட்டும் ஒரு குப்பையான இடத்தினை பெற்றிருப்பது வருந்தத்தக்கது.

இதற்கான மாற்று முயற்சிகளை நாம் கையில் எடுக்கவேண்டிய முக்கிய இடத்தில் இருக்கிறோம், திரைத்துறையும், இலக்கிய படைப்புகளும் இணைந்து உருவாகும் படைப்புகளுக்கான களம் என்பது ஒவ்வொரு தலை முறையிலும் உருவாக முயற்சிக்கும் பொழுதெல்லாம், அதனை வியாபாரம் என்னும் வேர்கள் தனது கொடிய கரங்களால் கைப்பற்றிக் கொள்கிறது. இதனைத் தவிர்த்து நிறைய இயக்குனர்கள் தங்களது படங்களை பதிவு செய்திருந்தாலும், இவர்களது எண்ணிக்கை மிகக்குறைவாகவே இருக்கிறது. இதுதவிர புத்தகங்களின் வழியே நிகழும் தவறான வரலாறு மட்டுமே மிக அதிகமாக உள்ளது. இதனால், நமது எதிர்கால தலைமுறை தனது வரலாற்றின் தவறான பக்கங்களையே வாசிக்க வேண்டிய இடத்தில் நிற்கும். இதனை மாற்றியமைக்க வேண்டிய கட்டாயமும், பொறுப்பும் நம்மிடமே உள்ளது. இதற்கான முயற்சிகளைத் தொடங்க வேண்டிய இடத்தில்தான் நாம் இருக்கிறோம். தொடங்க வேண்டியது நமது கடமை.•

# மலினா - ஓர் அறிமுகம்

## நாகரத்தினம்

'**ம**லினா' 2000ல் வெளியான இத்தாலிய மொழித் திரைப்படம். மேலோட்டமாக இப்படத்தை பார்ப்பவர்கள் அனைவருக்கும் இவ்வளவு மோசமான படமா என்று தான் தோன்றும். ஆனால் தனியாக இருக்கும் ஒரு பெண்ணை இந்த சமூகம் என்ன வேண்டுமானாலும் செய்யும் என்பதன் செல்லுலாய்டு சாட்சி இப்படம். இப்படத்தை விமர்சனம் செய்ய வேண்டும் என்ற விஷயங்களை தவிர்த்துவிட்டு நாம் படத்தின் கதை பற்றி மட்டும் பார்க்கலாம். விமர்சனம் வேண்டாம் என்பதற்கு 14 வருட இடைவெளியும் கூட ஒரு காரணம் தான்! கிட்டத்தட்ட ஒரு நாவல் படிக்கும் சுவாரஸ்யத்தை தரும் படம் மலினா!

1940 இரண்டாம் உலகப்போர் நடந்து கொண்டிருக்கும் சமயம். சிசிலி எனும் நகரத்தில் 'மலினா' எனும் பேரழகி வசிக்கிறாள். கணவனைத் தவிர அவளுக்கு உறவு என சொல்லிக் கொள்ள அவளது தந்தை மட்டுமே. அவரும் தனியாகதான் தங்கியிருக்கிறார். அவளது கணவன் போர் வீரன் என்பதால் அவனும் போருக்கு சென்றுவிட இப்போது மலினா மட்டும் தனியாக இருக்கிறாள். மலினா தன் தனிமையை வெறுக்கிறாள், போருக்கு சென்றுவிட்ட தன் கணவன் எப்போது வருவான் எனக் காதலுடன் காத்திருக்கிறாள். மலினா தெருவில் நடந்து செல்ல நேரிட்டால் கூட பலரது இச்சை பார்வைக்கு ஆளாக வேண்டியிருந்தது, அதில் ஒருவன் தான் ரெனிட்டோ எனும் பதின்பருவச் சிறுவன்.

எல்லோரும் மலினாவை பார்ப்பது போல தான் அவனும் மலினாவை பார்த்தான். ஆனால் கொஞ்சம் காதலுடன். அவளை அடிக்கடிப் பின் தொடர்வான். அவள் வீட்டின் சுவரில் ஒரு துளையை ஏற்படுத்தி வீட்டிற்குள் இருக்கும் மலினா எப்படியானவள் என்றும் பார்ப்பான். அவளைப் பற்றி ஊர் பேசும் புரளிகளைக் கண்டு எந்த சலனமும் காட்டாத, தன் கணவன் மீது கொண்ட காதல் மாறாத மலினாவை அவன் மட்டுமே அறிந்திருந்தான். சில நாட்களிலேயே போருக்கு சென்ற கணவன் இறந்துவிட்டான் என்ற செய்தி மலினாவை வந்தடைகிறது. ஊர் பேசும் புரளிகள் இன்னும் அதிகமாகிறது, அவள் தனியாக இருப்பதும், அழகாக இருப்பதும் மட்டுமே அதன் காரணம். கணவனின் இழப்பினால் துக்கப்படும் மலினாவை ரெனிட்டோ மட்டுமே பார்க்கிறான். நகரத்தார் பேசும் பழிச்சொற்கள் எல்லாம் அறிந்திருந்தும் அவற்றிலிருந்து விலகி இருக்கவே விரும்புகிறாள் மலினா.

எப்போதும் போல தன் தந்தைக்கு பணிவிடை செய்துகொண்டு நாட்களை நகர்த்துகிறாள். ஆனால், அதற்கும் தடையாய் ஒரு மொட்டைக் கடிதம் அவள் தந்தையின் கையில் வந்து சேர்கிறது. அதில் மலினாவிற்கு ஒரு பல் மருத்துவருடன் தவறான உறவு இருக்கிறது என எழுதப்பட்டிருக்கிறது, கடைசியில் தந்தையும் அவளை ஒதுக்குகிறார். இதன் விளைவாக, பல் மருத்துவரின் மனைவி மலினா மீது நீதிமன்றத்தில் வழக்கு தொடர்கிறாள். அந்த வழக்கிலிருந்து மலினாவைக் காப்பாற்றுகிறார் அவளின் வக்கீல். அதை சாக்காக வைத்துக் கொண்டு மலினாவிடம் எல்லை மீறுகிறான். இதை அறியும் ரெனிட்டோ, அவளைக் காப்பாற்ற கடவுளிடம் மன்றாடுகிறான்.

இதற்கிடையே, போர் சிசிலியை வந்தடைந்து அங்கே குண்டு வெடிப்புகளும் நிகழ்கிறது, இதில் மலினாவின் தந்தை இறந்து போக, மலினா அநாதையாகிறாள். தந்தையின் இழப்பு அவளை வறுமையில் தள்ள, வறுமை நிலை அவளை விலைமகளாக்குகிறது. அவளின் நடை, உடை, அலங்காரம் எல்லாம் நகரத்து மக்களுக்கு அவள் மீது இருக்கும் வெறுப்பை இன்னும் அதிகமாக்குகிறது. நகரத்துக்கு வரும் ஜெர்மனி போர் வீரர்களுடனும் விருப்பம் இல்லாமல் படுக்கையைப் பகிர்ந்து கொள்கிறாள். மலினா வேறு வேறு ஆண்களுடன் சுற்றுவதை ரெனிட்டோவும் பார்க்கிறான்.

இதுவும் அதிக நாள் நீடிக்கவில்லை. போர் முடிவுக்கு வருகிறது, இப்போது அவளுக்கு ஆதரவளிக்கும் எந்த ஆணும் இல்லாமல் போகிறான். போருக்கு சென்ற அந்த நகரத்தைச் சேர்ந்த எல்லோரும் வீடு திரும்புகிறார்கள். தன் கணவனை மயக்கியவள், கணவனுக்கு துரோகம் செய்தவள் என அந்நகரத்துப் பெண்கள் தேக்கிவைத்திருந்த ஆத்திரம் முழுவதும் மலினாவை நோக்கி எந்த தடையும் இல்லாமல் பாய்கிறது. அவளைத் தெருவிற்கு இழுத்துவந்து அடித்து, உதைத்து, அவள் தலையை மொட்டை அடித்து தங்கள் ஆத்திரத்தை தீர்க்கின்றனர் அந்த நகரத்துப் பெண்கள். தட்டுத்தடுமாறி எழும் மலினா எல்லா ஆண்களையும் பார்க்கிறாள், அந்த பார்வையின் அர்த்தம் விளங்கா பெண்கள் அவளை "ஒழுங்கா இந்த நகரத்தைவிட்டே போயிடு!" எனக் கூற, அவளும் அங்கிருந்து நகர்கிறாள். அதற்குப் பின் அவள் எங்கு செல்வாள் என்று நகரத்து மக்களுக்கு அக்கறை இருக்குமா என்ன? ஆனால் ஒருவனுக்கு இருந்தது. 'ரெனிட்டோ'. அவள் மெஸ்ஸினா எனும் இடத்திற்குச் செல்ல ரயில் ஏறுவதைப் பார்த்துவிட்டு திரும்புகிறான்.

சில நாட்கள் கழித்து நினோ ஸ்கோரிடா (மலினாவின் கணவன்), அந்த நகருக்கு வருகிறான். இறந்துவிட்டதாக கூறப்பட்டவன் ஒரு கையை மட்டும் இழந்து வந்திருப்பதை நகரத்து மக்கள், ஆச்சர்யமாகப் பார்க்கின்றனர். "ஹேய் அவன் மலினாவின் கணவன் தானே", "இவன் உயிருடன் தான் இருக்கிறானா" என முணுமுணுத்துக் கொள்கின்றனர். நினோ தன் வீட்டிற்குச் சென்று பார்க்கிறான். அங்கு தன் மனைவி மலினா இல்லை என்பதையும், வேறு யார்யாரோ தங்கியிருக்கிறார்கள் என்பதையும் பார்த்து அதிர்ந்து போகிறான். தன் மனைவி பற்றி யாரிடம் விசாரித்தும் அவளைப் பற்றிய தவறான செய்திகளைத் தவிர வேறு எதுவும் கிடைக்கவில்லை. இதைப் பார்க்கும் ரெனிட்டோ, எப்போதும் போல் இல்லாமல் முதல் முறையாக மலினாவிற்காக ஒரு உதவியைச் செய்கிறான்.

ஒரு காகிதத்தை எடுத்து நினோவிற்கு முகவரி இல்லாக் கடிதம் ஒன்றை இவ்வாறு எழுதுகிறான்,

"உங்கள் மனைவி மெஸ்ஸினாவில் தான் இருக்கிறாள். நகரத்தில் எல்லோரும் சொல்வது போல அவள் தவறான பெண் அல்ல. அவள் கடைசி வரை உங்களை மட்டுமே நேசித்தாள் என்பது எனக்கு மட்டும் தான் தெரியும்"

இக்கடிதத்தை அவனிடம் சேர்க்கவும் செய்கிறான் ரெனிட்டோ.

அவளைத் தேடிக் கிளம்பிய நினோ ஒரு வருடத்திற்குப் பிறகு தன் மனைவி மலினாவைக் கண்டுபிடித்து அவளுடன் மீண்டும்

சிசிலிக்கு வந்து சேர்கிறான். சிசிலி நகரத்துத் தெருவில் தன் அழகான மனைவி மலினாவைத் தன் தோளோடு தோள் சேர்த்து அணைத்தபடி பெருமையாக நடந்து வருகிறான். மக்கள் அனைவரும் குறிப்பாக பெண்கள் மலினாவின் தைரியத்தைப் பார்க்கின்றனர். அதன்பின் அவளை யாரும் மிரட்டவில்லை, துன்புறுத்தவில்லை. தவறாக ஒரு பார்வை கூட இல்லை.

எல்லோரையும் போல் மலினாவும் காய்கறி வாங்க சந்தைக்கு செல்கிறாள். எல்லோரும் அவளுடன் சகஜமாகவே பழகுகின்றனர். மலினாவிற்கு மட்டும் மனதில் ஒரு தயக்கம் இருக்கத்தான் செய்தது. காய்கறி வாங்கி வீடு திரும்புகையில் கை நழுவி பையிலிருந்த சில ஆரஞ்சுப் பழங்கள் கீழே விழுகிறது. தூரத்திலிருந்து மலினாவைப் பார்த்துக் கொண்டிருந்த ரெனிட்டோ ஓடி வந்து அவற்றை எடுத்துக் கொடுக்கிறான். அவள் நன்றி சொல்லிவிட்டுத் செல்லும் போது, "பூனா ஃபார்ச்சுனா சிங்கோரா.மலினா" (லத்தினில் "குட் லக் மிஸ்சஸ்.மலினா" என அர்த்தம்). இது மட்டுமே ரெனிட்டோ மலினாவிடம் பேசும் ஒரே வார்த்தை. அவள் எப்போதும் போல நடந்து சென்றுவிட, இவனும் தன் சைக்கிளை எடுத்துக்கொண்டு நகர்ந்துவிடுகிறான். இவ்வாறு படமும் முடிகிறது.

மலினா அழகாய் இருந்தது அவள் தவறா? மற்ற ஆண்கள் அவளை ரசித்தது அவள் தவறா? ஆனால், ஒன்று மட்டும் உறுதி. மலினாவைப் பொறுத்தவரை அவள் அவளின் கணவனுக்கு கடைசிவரை உண்மையாய் இருந்தது ரெனிட்டோவைப் போல நமக்கும் தெரியும்! •

# முன்னேறி வரும் நாடுகளில்...

**லோகநாயகி @ அபிநயா**

**மு**ன்னேறி வரும் நாடுகளில் எழுத்தறிவு என்பது இன்றியமையாத ஒன்று. மனிதன் பகுத்தறிவு பெற்றவனாய் திகழ்ந்த காலத்திலிருந்து அறிவாற்றலை பெறுவதற்கு முக்கிய காரணமானது. எழுத்தறிவு என்பது இன்றியமையாத ஒன்று. வளர்ந்து வரும் தொழில் நுட்ப உலகத்தில் மனிதன் இயந்திரத்தை விட வேகமாக ஓடிக்கொண்டிருக்கிறான். முற்காலத்தில் உடல் உழைப்பே உயிர்நாடியாய் இருந்தது. தற்போது இயந்திரத்திற்கு முன் பல மணி நேரம் நமது உடலுழைப்பை தர வேண்டியிருக்கிறது. இந்த சூழ்நிலையில் நம்மை அடையாளப்படுத்திக்கொள்ள அறிவாற்றலைப் பெறுவது கட்டாயமாகிறது. சரி, அனைத்தையும் கற்றுத் தேர்ந்து விட்டால் நம்மால் நிலைக்க முடியுமாவென்ற கேள்வி மனதில் எழலாம். ஆனால் நமது விருப்பத்திற்கேற்ற ஒன்றிலாவது நாம் சிறப்பிடம் பெற வேண்டும்.

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு கல்வி உயிர்நாடியாகும். எழுத படிக்க தெரிந்தவர்களை எழுத்தறிவு பெற்றவர்களாய் நாம் அவதானித்து வருகிறோம். ஆனால், எழுத்தறிவு பெற்றவர்களை நாம் கற்றவர்களாய் உணர்ந்து கொள்ளலாகாது. கல்வி என்பது அறிவு சார்ந்தது. இன்றைக்கும் விளிம்பு நிலை மக்களுக்கு எட்டாக்கனியாகவே இருந்து வருகிறது இந்த மூன்றெழுத்து சொல். சட்டங்கள் பிறப்பிப்பதும் அதனை செயல்படுத்த முன் வருவதும் அன்றாடம் நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது. இவை வந்த வேகத்தில் காணாமல் போகின்றன. இதில் நாம் முக்கியமாக கவனிக்க வேண்டியது... அரசு இயற்றும் சட்டம் முறையாக செயல்படுத்தப்படுகிறதா? இதை குறித்த போதிய விழிப்புணர்வு மக்களிடம் இருக்கிறதா? என்பவை தான்.

கல்விக்கான சட்டமாய் 2009-ல் உருவெடுத்தது "கல்வி உரிமை சட்டம்" பொருளாதாரத்தில் பின் தங்கியவர்களும் கல்வி பெறும் விதமாக தனியார் பள்ளிகளில் 25 சதவிகிதம் இட ஒதுக்கீட்டை விளிம்பு நிலைச் சிறார்களுக்கு வழங்குவதே இச்சட்டத்தின் முக்கியமான அம்சம். இது கட்டாயமாக்கப்பட்டு சில இடங்களில் மட்டுமே வெற்றி கண்டுள்ளது. தனியார் பள்ளிகள் இன்று பணம் வாரும் இயந்திரமாய் பாடங்களை புகுத்தும் இருப்பிடமாய் மாறி வருகிறது என்பது மறப்பதற்கில்லை. தரமான கல்வியை இன்று நாம் நுகர்வது கடினமாகிறது. தனியார் பள்ளிகள் ஒரு சமூக அந்தஸ்தை தருகிறது என்பது பெற்றோரின் நிலைப்பாடு. ஆனால் அறிவை மேம்படுத்துவதிலும் , தரமான கல்வியையும் அதை பெறுவதற்கான பாதையையும் பெருகி வரும் தனியார்மயம் வகுக்கிறதா என்பது விடை தெரியாத கேள்வியகிறது. தரமான கல்வி நாட்டின் பக்கபலம் என்பதை மனதில் கொண்டு கல்வியை அனைவருக்குமான ஒன்றாய் மாற்றுவதற்கு இன்றே விதையிடுவோம்.

இந்த நாளின் சிறப்பு நாம் கொண்டாடுவதற்காக அல்ல முறைபடுத்துவதற்கும் தெளிந்த பாதைக்கான சூழலை உருவாக்குவதற்கு மட்டுமே ஆகும். செப்டம்பர் 8 "உலக எழுத்தறிவு" தினமாக அனுசரிக்கப்படுகிறது. 2011-ல் இந்தியாவில் நிகழ்ந்த கணக்கெடுப்பில் எழுத்தறிவு விகிதம் 74.04 சதவிகிதம் இருக்கிறதது. 2001-ல் எடுக்கப்பட்ட கணக்கெடுப்பிலிருந்து கடந்த பத்து ஆண்டுகளில் 9 சதவிகிதம் உயர்ந்திருப்பதை காணமுடிகிறது. இந்த ஆண்டின் கருப்பொருளாக எழுத்தறிவும் நிலையான முன்னேற்றமும் நிலவி இருப்பதை காண முடிகிறது. இந்தியாவில் மக்கள் தொகை 128 கோடியை எட்டி விட்ட சூழ்நிலையில் ஒரு நாட்டின் முன்னேற்றதிற்கும் எழுத்தறிவிற்கும் இடையிலான தொடர்பை நாம் ஆராய வேண்டியிருக்கிறது . அடிப்படை கல்வியை பெருக்குவதால் பொருளாதார முன்னேற்றத்தையும் வளர்ச்சியையும் அடைவதற்கான சாத்திய கூறுகள் இருக்கின்றன. ஜனநாயக நாட்டிற்கு இவை பெரிதளவும் பயன்படும். மக்கள் தீர்மானிக்கும் அரசின் திட்டங்களையும், செயல்பாடுகளையும் அறிந்து கொள்வதற்கு அதனை பற்றிய அறிவு என்பது முக்கியமான ஒன்று. ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கான அத்தனை அம்சங்களையும் நிலையாக ஒன்றிணைத்து அதற்கான வழிமுறைகளை தெளிந்த அறிவாற்றலை கொண்டு பெற வேண்டும். அதற்கு தரமான கல்வி அவசியமாகிறது. வேலைவாய்ப்பை மட்டுமே நோக்கிய இன்றைய கல்வி முறையில் ஒன்றை பற்றிய முழுமையான புரிதல் குறைவாகவே இருக்கிறது.

தமிழ்நாட்டின் ஆளுநர் திரு. ரோசையா இத்தினத்தின் சிறப்பு நிகழ்ச்சியில் தெருவிக்கும்போது, தற்போது 81.5 லட்சம் குழந்தைகள் கல்வி பெறாதவர்களாய் இருக்கின்றனர். இவர்களில் 34.12 சதவிகிதம் மாற்றுத்திறனாளிகள் ஆவர். ஆண்களில் எழுத்தறிவு 82.4 சதவிகிதமாகவும், பெண்களில் 65.4 சதவிகிதம் பேர் எழுத்தறிவு பெற்றவர்களாகாவும் இருக்கின்றனர். தமிழ்நாட்டில் எழுத்தறிவு வீகிதம் 84 சதவிகிதமாக இருக்கிறது. 100 சதவிகித எழுத்தறிவை பெறுவது மட்டும் நமது இலக்காக இருக்க கூடாது . நம் நாட்டின் பலதரப்பட்ட முன்னேற்றங்களுக்கு அடித்தளமாக செயல்படுவது எழுத்தறிவும் தரமான கல்வியும் மட்டுமே. •

# ஓர் அரசியல் சூதியல் சாசனம்

வே. ஸ்ரீநிவாச கோபாலன்

அருராமநாதனின் வீரபாண்டியன் மனைவி வரலாற்றுப் புதினத்தைப் படித்துவிட வேண்டும் என்பது எனது ஓராண்டு கால பேராவல். 'உடனடியாகப் படித்தே தீர வேண்டும்' என்ற அபிலாஷையோடு தேட ஆரம்பித்தால், நிச்சயமாக ஓராண்டுக்குள் யாருக்கும் கிடைத்துவிடக்கூடிய - கிடைப்பதற்குள் பல்வேறு நினைவுகூறத்தக்க காதல் அனுபவங்களைத் தன்பால் உண்டாக்கிவிடக்கூடிய (ஒரே) புத்தகம் இது என்பேன். என் ஆவலை அதிகப்படுத்தும் விதமாக கடந்த சில மாதங்களாக யாராவது அந்நாவலைப் பற்றி ஒருவர் விட்டால் இன்னொரவராக முகநூலில் எழுதித்தொலைத்து கடுப்பேற்றினார்கள். ஒரு வழியாக புத்தகத்தை ஆன்லைனில் வாங்கியதும், படிக்க நேரம் கிடைக்காமல் தேர்வுத்தொல்லைகளில் மாட்டிக்கொண்டு கூடுதல் இழுத்தடிப்புகள் வேறு படுத்தின. கடைசியில், வீரபாண்டியன் மனைவியைப் படிக்கப் ஆரம்பிக்கும் முன், நண்பர்கள் சிலர் உசுப்பேற்ற, நாவலைப் படிக்கப் போகும் ஆர்வக்கோளாறில் முகநூலில் என்னை வெறுப்பேற்றியவர்களுக்காக ஒரு பதிவை உளறி, ஒருவரிடம் நன்கு வாங்கிக்கட்டிக்கொண்டு விரதமெல்லாம் இருந்து படித்து முடித்துவிட்டேன். 1408 பக்கங்களைச் சுமந்துகொண்டு படிக்க கஷ்டமாகத்தான் இருந்தது. (வீரபாண்டியன் மனைவி ஒரு குண்டம்மா)

ஆரம்பம் அமர்க்களம். தலைகீழ் ராமகாதையாக கதை ஓடுகிறது. ஓடுகிறது என்பதை ஊர்கிறது என்று மாற்றிக்கொண்டால் சரி. கதை முழுவதும் ஒரே ஒரு பாத்திரத்தின் பலத்தில் தான் நடக்கிறது. வாள்நிலை கொண்டான் ஜனநாத கச்சிராயன் என்னும் அப்பாத்திரம் தான் கதையை எழுதியது போன்ற உணர்வு உண்டாகிறது. நாவலின் மிகவும் இரசிக்கத்தக்க விஷயங்கள் எல்லாம் இந்த ஜனநாத கச்சிராயனைச் சார்ந்தே வருகிறது. தன்னை சர்வ வல்லமை படைத்தவனாகக் கருதி எல்லோரையும் அலட்சிய பாவத்துடன் நடத்தும் ஜனநாதனின் கதாபாத்திரம் மிகவும் சிறப்பாகப் படைக்கப்பட்டுள்ளது இந்நாவலின் சிறப்பு. ஜனநாதன் என்ற பாத்திரம் இல்லாவிட்டால், நாவலே படுபோரானதாக இருந்திருக்கும். வீட்டைத் தாங்கும் நடுவுத்திரத் தூணைப் போல ஜனநாதன் நாவலின் கட்டமைப்பிற்கு உறுதி சேர்க்க வலுவாக நிற்பதாகச் சொல்லலாம்.

அரசியல் சூதினை பல்வேறு இடங்களில் நாவல் முழுவதும் பரவ விட்டிருப்பது இந்த நாவலுக்கான பிரத்யேகமானதோர் அணியாக நிர்ணயித்துக்கொள்ளத்தக்கது.. சில அரசியல் சார்ந்த சித்தரிப்புகள் தற்காலத்திற்கும் பொருந்துவதாக இருப்பது ரசனைக்குரியது.

சோழப்பேரரசின் ஒற்றுப்படைத் தலைவனான ஜனநாதன் பல்வேறு இடங்களில் ஓர் அரசியல் ஆசானைப் போல தோன்றுகிறான். மதுரைக்கோட்டையைக் கைப்பற்றுவதில் சாகசம் புரிந்து சோழ அரசியலில் உயர்பதவி அதிகாரம் பெறும் வீரசேகரன் என்ற இளைஞன் ஜனநாதனின் நண்பனாகி அவனது வஞ்சகமான திட்டங்களுக்கு பலியாகிறான். அதேநேரம், பாண்டிய சதிகாரியான ஊர்மிளாவுடன் காதல் கொண்டு பல இக்கட்டுகளில் சிக்கிக்கொள்கிறான்.

மதுரைக்கோட்டையைச் சோழர்கள் கைப்பற்றி வீரபாண்டியனின் தம்பியான விக்கிரம பாண்டியனுக்கு முடிசூட்டுகிறார்கள். கோட்டையை இழந்து வீரபாண்டியன் தன் மனைவியுடன் தப்பிவிட, அவனைப் பிடிக்க வீரபாண்டியன் மனைவியை சிறை பிடித்துவிடுகிறார்கள் சோழர்கள். பின், வீரபாண்டியன் தன் மனைவியை சிறைமீட்கப் படும் போராட்டங்கள் தான் பாதி நாவலை அடைத்துக்கொள்கிறது. என்றாலும், சுவாரஸ்யமான திருப்பங்களோடு இருப்பதால் சமாளித்துக்கொண்டு படிக்க முடிகிறது.

அதிகாரப் பகிர்வு, கிராம சுயராஜ்ஜியம், பெண்களுக்கு மறுமணம், மத நல்லிணக்கம் எனப் பல விஷயங்களைப் பேசுகிற உரையாடல்கள் குறிப்பிடத்தக்க முக்கியத்துவத்தை இந்நாவலுக்குப் பெற்றுத் தருகிறது. இந்த அம்சமே சிறந்த முற்போக்குக் கருத்துக்கள் கொண்ட நாவலாகவும் எடுத்துக்காட்டுகிறது. ஒரு வகையில், எல்லா பிரதேசங்களையும் ஒரு குடையின் கீழ் ஆள முயலும் சோழப் பேரரசின் வீழ்ச்சிக்கு ஆரம்பம் வந்த கதையாகவும் இந்நாவல் உருகொண்டுள்ளது. எப்போதும் போலவே ராஜாக்களின் வரலாற்றை மட்டும் சொல்லிவிட்டு நில்லாமல், மக்கள்நல நோக்கிலும் எழுதியதும் ஒரு சிறப்பு.

வீரபாண்டியன் மனைவி நாவல் விநோதமான சிறப்புகள் சிலவற்றைக் கொண்டுள்ளது என்பதை இந்நாவலைப் படித்த பலரும் கவனித்திருக்க மாட்டார்கள்.

- நாவலின் 126 அத்தியாங்களுமே 'ம' என்ற எழுத்தில் தான் தொடங்குகின்றன.
- 'துரதிஷ்டவசமாக', 'விஷமப் புன்னகை', 'சவம் போல' போன்ற சில சொல்லாடல்கள் அதிகபட்சமாக பயன்படுத்தப்பட்ட தமிழ் நாவல் இதுவாகத்தான் இருக்கக் கூடும்.
- சில வாக்கியங்கள் சொல் மாறாமல் பல்வேறு இடங்களில் திருப்பத்திரும்ப வருகிறது. ஓர் உரையாடலே கூட கேட்பவர் மட்டும் வேறாக இருக்க வெகுசில மாற்றங்களோடு மீண்டும் வேறொரு இடத்தில் வந்திருக்கிறது.

''மக்களுக்காகவே மன்னன் என்ற அரசியல் அடிப்படையில் பாண்டிய நாடு வளர்ந்து வந்து தற்காப்பிற்காக ஊர்ப்படைகளையும் கோட்டைகளையும் அதிகமாகப் பெருக்கிக் கொண்டது. சோழநாடோ மன்னனுக்காகவே மக்கள் என்ற ஏகாதிபத்திய அடிப்படையில் வளர்ந்து வந்து ஆக்ரமிப்பிற்காக அரசாங்கப் படைகளையும் அரசியல் தந்திரிகளையும் அதிகம் பெருக்கிக் கொண்டது.

ஆக, பாண்டிய நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் நடந்து வந்த ஓயாத போராட்டத்தை குடியரசுத் தத்துவத்திற்கும் ஏகாதிபத்திய வெறிக்கும் நடந்த போராட்டம் என்றோ தற்காப்புக்கும் ஆக்ரமிப்புக்கும் நடந்த போராட்டம் என்றோ இருதயத்துக்கும், மூளைக்கும், அன்புக்கும், அறிவுக்கும், மனசாட்சிக்கும், குயுக்திக்கும் நடந்த போராட்டம் என்றோ, இயற்கைப் பண்பாட்டிற்கும் செயற்கைக் கலாச்சாரத்திற்கும் நடந்த போராட்டம் என்றோ சுருக்கமாகச் சொல்லலாம்.''

என்று நாவலின் முதல் அத்தியாயத்திலேயே சொல்லப்படுகிறது. இதுவே இந்த நாவலில் சொல்லப்பட்ட கதையின் சுருக்கம் என்றும் கொள்ள முடியும். •




**வீரபாண்டியன் மனைவி (நாவல்)**

ஆசிரியர்: அரு.ராமநாதன்

விலை: ரூ. 490

(பிரேமா பிரசுரம்)

புகைப்படக்காரர்:
ம. சுரேஷ்

ஒரு குழந்தை பலரின் பணிவிடைகளைப் பற்று வளர்வதைப் போல பலரின் பங்களிப்பினால் படிப்படியாக முன்னேற்றம் அடைந்த வாகனம் சைக்கிள். உலகெங்மிருக்குமிருக்கும் எளிய மக்களின் பயண நண்பனாகத் திகழும் சைக்கிளின் பிறப்பு முதலான வரலாற்றுப் பயணமும் வளர்ச்சியும் பற்றிய ஒரு பார்வை.

# சைக்கிளின் பயணம்...





பிரான்ஸ் நாட்டைச் சேர்ந்த ‘கோம்டீ மீடி டீ ஷிவ்ராக்’(*Comte Mede De Sivarac*) என்பவர் *1791*ஆம் ஆண்டு பொழுதுபோகாமல் விளையாட்டாக வடிவமைத்தது தான் இந்த முதல் சைக்கிள். இது முதலில் முழுதும் மரத்தால் செய்யப்பட்டது. பெடல், பிரேக், ஹேண்ட் பார் என எதுவும் கிடையாது. இதனை ஓட்டுபவர் சைக்கிளில் உட்கார்ந்தபடி காலால் உத்தித்தள்ளி இயக்க வேண்டும்.
*1794*ஆம் ஆண்ட இந்த சைக்கிள் அறிமுகமானது.

பெடலுடன் கூடிய முதல் சைக்கிளை *1839*ஆம் ஆண்டு வடிவமைத்தார் ஸ்காட்லாந்தைச் சேர்ந்த கொல்லராகிய 'கிர்க்பாட்ரிக் மேக்மில்லன்'(*Krikpatric Macmillan*). இந்த சைக்கிளில் பெடல், பிரேக், ஹேண்ட் பார் உள்ளிட்ட அனைத்தும் இருந்தது. இதன் ஹேண்ட் பார் தையல் இயந்திரத்தின் பெடலைப் போல வடிவமைக்கப்பட்டிருந்தது.





தற்போதுள்ளது போன்ற பெடலை முதலில் *1863*ஆம் ஆண்டு பிரான்ஸைச் சேர்ந்த எர்னஸ்ட் மிசாக்ஸ் என்பவர் வடிவமைத்தார். அவரது சைக்கிளுக்கு மக்கள் மாபெரும் ஆதரவு தெரிவித்ததால், மிசாக்ஸ் கம்பெனி என்ற சைக்கிள் தயாரிப்பு நிறுவனத்தை ஆரம்பித்தார். உலகின் முதல் சைக்கிள் தயாரிப்பு நிறுவனம் அதுதான்.

*1871*ஆம் ஆண்டு பென்னி பார்த்திங் மற்றும் ஜேம்ஸ் ஸ்டார்லி ஆகியோர் மரச்சக்கரங்களுக்கு மாற்றாக இரும்பாலான சக்கரங்களை செய்தனர். இவர்கள் அமைத்த சைக்கிளில் முன்சக்கரம் மிகப்பெரியதாகவும் பின்சக்கரம் மிகச்சிறியதாகவும் இருந்தது. இந்த சைக்கிளைப் பெண்களும் ஓட்டத்துவங்கினர்.





ஹென்றி லாசன் என்பவர் *1876*ல் அறிமுகம் செய்த பல்சக்கரத்தையும் இயக்கச் சங்கிலியையும் கொண்டு ஜான் கெப்ஸ் ஸ்டேர்லி என்பவர் *1885*ல் புதிய சக்கிளை உருவாக்கினார். அதில் சமஅளவிலான இரு சக்கரங்கள் பல்சக்கரம் மற்றும் சங்கிலியால் இணைக்கப்பட்டிருந்தன. இந்த வடிவமைப்புதான் இன்றுவரை நிலைத்திருக்கிறது.

*1888*ல் ரப்பராலான டயரும் டியூபும் வந்த பிறகு *1910*ல் ‘சர் எமுண்ட் கிரேன்’ என்பவரால் இங்கிலாந்தில் தொடங்கபட்டது ‘ஹெர்குலிஸ்’ சைக்கிள் நிறுவனம்.





ராமையன்பட்டி குப்பைக் கிடங்கில்

## பிரிக்கப்படாத குப்பைகள்

**திருநெல்வேலி செப் 12:** திருநெல்வேலி மாவட்டம் ராமையன்பட்டியில் உள்ள குப்பைக் கிடங்கிலுள்ள பிரிக்கப்படாத குப்பைகளால் மக்கள் அவதிக்குள்ளாகி வருகின்றனர்.



திருநெல்வேலியில் இருந்து 5 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ராமையன்பட்டியில் ஒரு குப்பைக் கிடங்கு உள்ளது. இந்தக் குப்பைக் கிடங்கைச் சுற்றியுள்ள வட்டாரத்தில் 6 கிராமங்கள் உள்ளன.

இந்தக் குப்பைக் கிடங்கில் நாள்தோறும் 12 முதல் 13 டன் அளவுக்குக் குப்பைகள் கொட்டப்படுகின்றன. லாரிகளில் கொண்டுவந்து கொட்டப்படும் குப்பைகள் முறையாக எடுத்துவரப்படாததால் நடைபாதைகளிலும் சாலைகளிலும் சிதறுகிறது. இறந்த விலங்குகளின் சடலங்களும், மருத்துவக் கழிவுகளும் இவ்வாறு இரைக்கப்படுவதால் நோய்கள் உண்டாகும் அபாயம் அதிகமாக உள்ளது.

இங்கே உள்ள குப்பைக் கிடங்கினால் சுற்றுவட்டாரப் பகுதிகளில் எல்லாம் ஈ மற்றும் கொசுக்களின் தொல்லை அதிகமாக உள்ளது என்று மக்கள் முறையிடுகின்றனர். இந்த நிலையில், ஈ, கொசுக்களை விரட்ட குப்பைகளை அந்தப் பகுதியிலிருந்து அகற்ற நடவடிக்கை எடுக்காமல், கிடங்கைச் சுற்றி 20 கிலோமீட்டர் பரப்பளவிற்கு வேப்ப மரங்களை நடுவதற்கு அரசு முன்வந்தது. அதன் மூலமாக ஈ மற்றும் கொசுத்தொல்லை ஓரளவிற்குக் குறைந்துள்ளது என அப்பகுதி மக்கள் தெரிவிக்கின்றனர். மேலும், அரசு இங்குள்ள குப்பையிலிருந்து மின்சாரம் தயாரிக்க இருப்பதாகவும் உரம் தயாரிக்கப் போவதாகவும் சாக்குப் போக்குகளைச் சொல்லித் தட்டிக் கழிக்கின்றனர் என்று அந்தப் பகுதி மக்கள் குறை கூறுகின்றனர்.

இந்நிலையில் அந்தப் பகுதியில் வசிக்கும் மருத்துவப் பிரதிநிதி ரங்கராஜனிடம் கேட்ட போது, "குப்பைகளை லாரிகளில் எடுத்து வரும் போது மருத்துவக் கழிவுகள் மற்றும் இறந்த விலங்குகளின் சடலங்கள் போன்ற கழிவுகள் நடைபாதைகளில் சிதறுவதால் சுகாதாரக் கேடு உண்டாகிறது" என்று தெரிவித்தார்.

அந்தப் பகுதியில் வசிக்கும் தங்கமாள் என்பவரிடம் கேட்ட போது, "எங்கள் வீடு இந்தக் குப்பைக் கிடங்கின் பின்னால் தான் உள்ளது. குப்பைக் கிடங்கிலிருந்து தொடர்ந்து துர்நாற்றம் வீசுகிறது. பிரிக்கப்படாத குப்பைகளால் அடிக்கடி குப்பைக் கிடங்கில் தீப்பற்றி எரிகிறது. இதனால், உயிருக்கு பயந்து தான் இருக்க வேண்டியுள்ளது. குப்பையிலிருந்து மின்சாரம் எடுக்கப் போவதாக சொல்லி வருகிறார்களே தவிர எதுவும் நடவடிக்கை எடுக்கப்படவில்லை." என்று கூறினார்.

இந்நிலையில், கிடங்கில் கொட்டப்படும் குப்பைகளை முறையாகப் பிரிக்க வேண்டும் என்றும் குப்பைக் கிடங்கின் சுற்றுவட்டாரப் பகுதிகளில் வசிக்கும் மக்களுக்குப் போதுமான சுகாதாரச் சூழலை ஏற்படுத்தித் தரவேண்டும் என்றும் ராமையன்பட்டி வட்டார மக்கள் மாவட்ட நிர்வாகத்தினரைத் தொடர்ந்து வலியுறுத்துகின்றனர். **- வாசுகி**

நெல்லையில்

## பராமரிப்பில்லாத நிழற்குடைகள்

**திருநெல்வேலி, செப் 09:** நெல்லையில் பேருந்துப் பயணிகள் நிழற்குடை பராமரிப்பின்றி மோசமான நிலையில் உள்ளதால் பயணிகள் கடும் சிரமத்திற்குள்ளாகி வருகின்றனர்.

திருநெல்வேலி மாவட்டம் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திலும் ராணி அண்ணா மகளிர் கல்லூரியிலும் ஆயிரக்கணக்கான மாணவ, மாணவிகள் பயின்று வருகின்றனர். அவர்களில் பெரும்பாலானோர் தினசரிப் போக்குவரத்திற்குப் பேருந்தையே நம்பியுள்ளனர். இந்நிலையில் அப்பகுதியில் உள்ள பயணிகள் நிழற்குடைகள் பராமரிப்பே இல்லாமல் கவலைக்கிடமான நிலையில் இருக்கின்றன.

பயணிகள் நிழற்குடை சிதிலமடைந்திருப்பதால் அனைவரும் பேருந்துக்காகக் காத்திருக்கும் சமயத்தில் சாலையோரத்திலேயே குவிந்துவிடுகின்றனர்.

பராமரிப்பில்லாத நிழற்குடையால் வரும் இன்னல்களோடு போதிய பேருந்து வசதியின்மையும் அதிக சிக்கலை உண்டாக்கிவிடுகிறது. இது குறித்து ராணி அண்ணா கல்லூரியின் மாணவி ஒருவரிடம் கேட்டபோது, ''நாங்கள் சலுகைக் கட்டணப் பாஸை வாங்கியுள்ளோம். ஆனால், சலுகைக் கட்டணத்தில் இயங்கும் பேருந்துகளின் எண்ணிக்கை குறைவாக உள்ளது. எனவே, அரசு போதிய அளவு பேருந்து வசதியைச் செய்துதர வேண்டும். அதே சமயத்தில் இங்கே பயணிகள் நிழற்குடையும் உடைந்து கிடக்கிறது. அதனால், மாணவிகள் சாலையோரங்களில் கூடிவிடுகிறார்கள். எனவே, பயணிகள் நிழற்குடையையும் சீரமைத்துத் தரவேண்டும்.'' என்று கூறினார்.

இதேபோல, நெல்லை மாவட்டத்தின் பல்வேறு பகுதிகளிலும் பேருந்துப் பயணிகள் நிழற்குடை மோசமான நிலையில் உள்ளதால், நிழற்குடையைச் சீரமைக்க மக்கள் கோரிக்கை விடுத்து வருகின்றனர். **- முகமது அலி ஜின்னா தல்ஹா**

பாளையங்கோட்டையில்

## பாரதி விழா

**பாளையங்கோட்டை செப் 14:** பாளையங்கோட்டை என்.ஜீ.ஓ.காலனி விரிவாக்கப் பகுதியான அழகர்நகர், திருமால் நகர் நலச் சங்கம் சார்பில் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர்கள் கலைஞர்கள் சங்கத்தின் புதிய கிளை துவக்க விழாவும், பாரதி விழாவும் சிறப்பாக கொண்டாடப் பட்டன.

மாலை 5 மணிக்குத் தொடங்கிய விழாவில் குழந்தைகள் பாரதியார் வேடமிட்டு பாரதியாரின் கவிதைகளைப் படித்தனர். மகாகவி பாரதியைப் பற்றி மழலை மொழியில் பேசினார்கள். பாரதியார் பற்றி கட்டுரைகள் எழுதினார்கள். குழந்தைகளின் பெற்றோர்கள், பொதுமக்கள் என திரளானோர் கூடி இருந்து நிகழ்ச்சியை கண்டு ரசித்தனர்.

நெல்லை மாவட்டச் செயலாளர் திருவுடையான் பாரதியார் பாடல்களைப் பாடி மகிழ்வித்தார். பேராசிரியர் நடராஜன், எழுத்தாளர் நாறும்பூ நாதன் ஆகியோர் பாரதியை நினைவு கூர்ந்து பேசினார்கள்.

வரகுணன், முருகன், வைகுண்டமணி, மற்றும் அப்பகுதி அழகர் நகர் சங்க செயலாளர் வீ.பழனி, பேராசிரியர் பொன்னுராஜ் ஆகியோர் கலந்து கொண்டனர்.

மரம் வளர்ப்போம்; மழை பெறுவோம்

புதிய பேருந்து நிலையத்தில்

# மாடுகள் அட்டகாசம்; பயணிகள் அவதி


புகைப்படக்காரர்: தௌஃபிக் புரோஸ்கான்

**திருநெல்வேலி, செப் 05:** இரவு நேரங்களில் உலா வரும் மாடுகளினால் நெல்லை புதிய பேருந்து நிலையத்தில் பயணிகளும், வியாபாரிகளும் பெரும் பாதிப்புக்கு உள்ளாகின்றனர்.

புதிய பேருந்து நிலையம் என அழைக்கப்படும் டாக்டர். எம்.ஜி.ஆர் பேருந்து நிலையத்திலிருந்து தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களுக்குப் பேருந்து இயக்கப்படுகிறது. மேலும், அண்டை மாநிலங்களுக்கும் இங்கிருந்து பேருந்து செல்கின்றது. எனவே, இங்கு தினமும் மக்கள் பெருமளவில் வந்து செல்கின்றனர்.

சென்னை மற்றும் பிற மாநிலங்களுக்கு இரவு நேரங்களில் தான் நெல்லையிலிருந்து அதிக பேருந்துகள் இயக்கப்படுகின்றன. ஆனால், இரவு நேரங்களில் பேருந்து நிலையத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் உள்ள மாடுகள் பேருந்து நிலையத்திற்குள் தடுப்புகளை மீறி உள்ளே வருகின்றன. மாடுகள் கூட்டமாக உலா வருவதால் பயணிகள் அச்சத்துடனே செல்கின்றனர்.

திடீரென மாடுகள் பயணிகளை தாக்குவதால் இரவு நேரங்களில் பேருந்து நிலையத்திற்குள் பயணிகள் வருவதற்கே பயப்படுகின்றனர். மேலும் சில நேரங்களில் மாடுகள் அங்கு உள்ள கடைகளுக்குள் புகுந்து பொருட்களை சேதப்படுத்துகின்றன. இதனால், வியாபாரிகளும் பெரும் சிரமத்திற்குள்ளாகின்றனர். மாடுகள் கூட்டமாக பேருந்திற்கு முன்னால் படுத்துவிடுவதால், பேருந்தை உரிய நேரத்தில் இயக்க முடியாமல் தாமதிக்க நேருவதாக ஓட்டுனர்கள் கூறுகின்றனர்.

பேருந்து நிலைய அதிகாரிகள் இதனைக் கண்டுக்கொள்வதில்லை. இரவுநேர கண்காணிப்பாளர்கள் இல்லாததே அதிகளவு மாடுகள் சுற்றித்திரிவதற்கு காரணம் என பொதுமக்களும், வியாபாரிகளும் குற்றம் சாட்டுகின்றனர்.

இரவு நேரங்களில் மீதமுள்ள சாப்பாடுகளை ஹோட்டல்காரர்கள் பேருந்து நிலையத்திற்குளே கொட்டுவதால் அதனைச் சாப்பிடுவதற்கு மாடுகள் படையடுக்கின்றன. எனவே, சாப்பாடுகளை பேருந்து நிலையத்தில் கொட்டாமல் தடுக்க வேண்டும்; தடுப்பு வேலிகளை வலுவாக அமைக்க வேண்டும்; மாடுகள் உலாவுகிறதா என அதிகாரிகள் கண்காணிக்க வேண்டும். என பேருந்து ஓட்டுனர்களும், பயணிகளும் அரசுப் போக்குவரத்துக் கழகத்திற்குக் கோரிக்கை விடுத்துள்ளனர்.

- தௌஃபிக் புரோஸ்கான்

---

# குறியீடுகளைத் தெரிந்து கொள்வோம்

☿ புதன்
♀ வெள்ளி
⊕ பூமி
♂ செவ்வாய்
♃ வியாழன்
♄ சனி
⛢ யுரேனஸ்
♆ நெப்டியூன்

**வானியல் குறியீடுகள்**

குறியீடுகளை நாம் தினமும் பயன்படுத்தி வருகிறோமில்லையா? முகநூலில் விருப்பக்குறியீடு எனப்படும் லைக்கைச் (Y) சீண்டாதவர்களே இல்லை. நிறைய பேருக்குத் தெரியாத குறியீடுகள் இருக்கின்றன. பல்வேறு தீவிரவாத அமைப்புகள் கூட இரகசியக் குறியீடுகள் வைத்திருக்கின்றன. தீவிரவாதக்குறியீடுகளை நாம் விட்டுவிடலாம். ஆனால், நாம் அவசியம் தெரிந்துகொள்ள வேண்டியவை 'வானியல் குறியீடுகள்'.

படத்தில் இருப்பவை தான் அந்தந்த கிரகங்களின் வானியல் குறியீடுகள். அந்தந்த கிரகங்களுக்குரிய குறியீட்டால் தான் கிரகங்களைக் குறிப்பார்கள் விண்வெளி ஆய்வாளர்கள்.

குறியீடுகள் பல்லாண்டு காலமாக பயன்பாட்டில் இருக்கும் உத்தி. ஆதிவாசிகள் குகைகளிலும், பாறைகளிலும் பல்வேறு குறியீடுகளை வரைந்து தங்கள் வேட்டையாடலுக்குப் பயன்படுத்தினர். குறியீடுகளை பயன்படுத்த ஆரம்பித்த சமயத்தில் தான் எழுத்துக்கள் பிறந்தன. எதையும் எளிய முறையில் கையாள குறியீடுகள் தேவை. குறியீடுகள் வெற்றியின் வாசல்கள். காலகாலமாக வாழ்வை எளிதாக்கி வருவன. இருத்தலை வளப்படுத்துவதற்கு குறியீடுகள் அவசியம்.

# நிழல்கள் பேசும் நிஜங்கள்

கதிரவன்



sauravkathir62@gmail.com





*தண்ணீருக்காக பூமியில் ஆழ்துளையிடும் போது உண்டான புழுதிப்படலம். 350 அடியை எட்டிய பிறகும் ஏமாற்றம். (வள்ளியூர்)*





*பசியில் மண்ணும் மக்களும் (தென்காசியில்)*





*குயவனின் சிற்பம்(ஊர்: பத்தமடை)*